8th September 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சந்தன எண்ணெக்கு பெரும்பாலும் அந்நிய நாடுகளில்தான் டிமாண்டு.

SRI M. KALYANASUNDARAM : சந்தன எண்ணெ உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை சர்க்கார் ஆரம்பிப்பதற்கு இப்பொழுது தனியார்கள் ஆட்சேபணை தெரிவித்திருக்கிறார்களா ? அப்படியானால் அவர்களது ஆட்சேபம் என்ன ? அதைக் கணக்கில் எடுத்துக்கொண்டு சர்க்கார் இதை கைவிட்டுவிடுவார்களா ? அல்லது சர்க்காரே அதை நடத்துவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது தனிப்பட்டவர்கள், வியாபாரத்தில் இருக்கிறவர்கள் ஆட்சேபணை தெரிவிக்கிறார்கள். அப்படித் தெரிவிப்பது இயற்கையே. ஆனால் இந்த யோசனையை, மைசூர் அரசாங்கம் அதன் ராஜ்யத்திலுள்ள சந்தன மரங்களிலிருந்து எண்ணெ இறக்குகிறார்கள். அப்படி இறக்கி அதை அமெரிக்காபோன்ற நாடுகளுக்கு விற்கிறார்கள். ஆனால் முன்பிருந்த அமைச்சர் ஒருவர் என்னிடம் ஒரு யோசனை சொன்னார். இதுபற்றி பரிசீலனை செய்வது இன்னொருவர் ஆட்சேபிக்கிறார்கள் என்பதற்காகவல்ல. நாம் இவைகளை விற்பதை விட எண்ணெ இறக்குவதில் சர்க்காருக்கு லாபம் உண்டா என்பதை நிச்சயப்படுத்திக்கொண்டுதான் இதில் இறங்கவேண்டும். அதுதான் பரிசீலனை செய்யப்பட்டுவருகிறது. அதற்கு பிறகு ஒரு பைலட் ஸ்கீமாகச் செய்யலாமா என்பது பற்றி இப்பொழுது பரிசீலனை செய்யப்படுகிறது.

*Horses*

* 100-AA Q.—SRI A. VEDARATNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவிலுள்ள கொடிக்காட்டில் உள்ள நல்ல ரகக் குதிரைகளை அபிவிருத்தி செய்ய அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A scheme on an experimental basis was proposed by the Animal Husbandry Department in 1950 for the development of horses in the Kodikadu area of Tanjore district but it was not pursued by the Government on grounds of economy.

SRI A. VEDARATNAM : இந்த கொடிக்காட்டில் இருக்கும் குதிரைகளை அபிவிருத்தி செய்ய இதற்கு முன்னமேயே ஒரு திட்டம் வந்து அதை அரசாங்கம் பரிசீலனை செய்தது. இப்பொழுது அதிகாரிகள் வந்து அதைப் பார்த்துவிட்டு புள்ளிவிவரங்கள் மற்றெல்லாம் எடுத்துக் கொண்டுவந்தார்கள். இப்பொழுது மேலும் அதுபற்றி என்ன நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பு பரிசீலனை செய்ததில் பொருளாதார நிலையையொட்டித்தான் இது கைவிடப்பட்டது. அது ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆனால் பிறகு இந்தப் பிராந்தியத்தை "ஒயில்ட் லைப் சாங்க்சுவரி" யாக்க நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது கால்நடை டைரக்டர் அவர்கள் ஒரு சிறிய திட்டத்தை சமர்ப்பித்திருக்கிறார், இங்கிருக்கிற குதிரைகளை வளர்ப்பதுபற்றி. அதற்குள்ள செலவெல்லாம் 4,500 ரூபாய்தான் ஆகிறது. ஆகவே இதை இப்பொழுது அரசாங்கம் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறது.

SRI R. SRINIVASA AYYAR : Sir, is there any proposal before the Government to start a horse breeding station in this State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no such proposal now.

[8th September 1958

SRI R. KRISHNASAMI NAIDU : ராமநாதபுரம் ஜில்லா, ராமநாதபுரம் தாலூகாவில் மண்டபப் பகுதிகளில் உள்ள காடுகளில் இத்தகைய குதிரைகள் இருக்கின்றன. அவைகளையும் அபிவிருத்தி செய்ய ஏதாவது திட்டம் அரசாங்கத்தினிடம் இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி குதிரைகளை அபிவிருத்தி செய்யும் திட்டம் ஒன்றும் இப்பொழுது அரசாங்கத்தினிடம் இல்லை. முதலில் வேதாரண்யத்தில் உள்ள கொடிக்காட்டில் உள்ளதை என்ன செய்யலாம் என்பதை பரிசீலனை செய்து அங்கு ஏதாவது செய்யலாமா என்று பார்த்த பிறகுதான் மீதியுள்ளவைகள் எடுத்துக்கொள்ளப்படும்,

SRI A. A. RASHEED : Sir, is there any proposal to start horse racing in Tanjore district to breed horses?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : These are ponies. These are not fit for races.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, குதிரை அபிவிருத்தி செய்வதற்கு அரசாங்கத்தினிடத்தில் ஒருவிதமான திட்டமும் இல்லை என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அப்படியானால், குதிரைப் பந்தயத்தை நடத்துவதால் குதிரைகளை அபிவிருத்தி பண்ணுவதாக ஆகாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : குதிரைப் பந்தயத்தில் உபயோகப்படும் குதிரைகளை ராணுவத்திற்கு பயன்படுத்த அரசாங்கம் ஆலோசித்து வருகிறது.

*Fertilizers.*

*100-BB *Q.*—SRI P. S. K. LAKSHMIPATHI RAJ (on behalf of Sri S. Lazar) : Will the Hon. the Minister for Home be pleased to place a statement on the Table of the House as to the demand and supply position of fertilizers in the State for the year 1958–59 and the steps taken by the Government to keep up agricultural production from the point of view of proper manuring of agricultural lands?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement[a] is placed on the table of the House.

*Libraries*

*100-CC *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா ?

(அ) சென்னை ராஜ்ய இந்துமத அறநிலைய போர்டின் ஆதிக்கத்திலிருக்கும் எத்தனை கோவில்களிலும், தர்ம ஸ்தாபனங்களிலும் இலவச வாசகசாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன ?

(ஆ) மேற்கண்ட இலவச வாசகசாலைகளுக்கு ஜில்லா லைப்ரரி அத்தாரிடி மூலம் உபகாரத் தொகை கொடுக்கப்பட்டு வருகின்றனவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Ninety-one temples and five maths.

(*b*) No, Sir.

SRI P. G. MANICKAM : ஸார், இந்த கோவில்களில் இருக்கும் வாசக சாலைகளின் அபிவிருத்திக்காக லைப்ரரி அத்தாரிட்டிகளிடமிருந்து உதவி பெறுவதற்கு அரசாங்கம் ஒரு முறையை ஏற்படுத்துமா ?

---

[a] Printed as Appendix I on pages 383–384 infra.